உ

சிவமயம்.

# "துறவி"

| | | |
|---|---|---|
| மன்மத மலர் 2 | திங்கள் வெளியீடு. | மாசி இதழ் 2 |




## தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,

திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர்:

சுவாமி சொரூபானந்தா

ஆண்டுக் கட்டணம் ரூ 2/-    தனி இதழ் அணா 3/-

ஓம்.

# "துறவி"

## பொருளடக்கம்.


| எண். | | | | பக்கம். |
|---|---|---|---|---|
| 1 | கடவுள் வாழ்த்து | — | | 25 |
| 2 | நமது பத்திரிகை | — | | 25 |
| 3 | துறவு | — | ஐயாறு அடிகள் | 27 |
| 4 | சிவஞான போதம் | — | திருநீ சண்முகானந்தசுவாமிகள் | 31 |
| 5 | அவிரோத வுந்தியார் | — | சுவாமி முக்தாநந்தா அவர்கள் | 36 |
| 6 | பிறவியைப் பழித்தல் | — | சுவாமி அருணகிரிநாதரவர்கள் | 41 |
| 7 | யோகசிகோப நிஷத் (தமிழ் மொழிப்புரை) | — | திரிமூர்த்தி சுவாமிகள் | 45 |


## ஓர் முக்கிய அறிவிப்பு.

பேரன்புடையீர்! நமது துறவி வெளியீட்டில் வெளி வரும் கட்டுரைகளெல்லாம் துறவிகளாலேயே வெளிவர வேண்டுமென்பது பல அன்பர்களின் கருத்தும் த. நா. து. சங்கத்தின் தீர்மானமும் ஆகும் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

த. நா. து. சங்கம்.

நமது துறவி திங்கள் வெளியீட்டின் நன்மை கருதி சென்னை, திருவுயர் K. M. அப்புச் செட்டியார் அவர்கள் நன் கொடை ரூபா 75 அன்புடன் அளித்துள்ளார்கள். அவர்களின் பேருதவிக்குச் சங்கத்தின் நன்றி என்றும் உரியது.

ஓம்.

# "துறவி"


| மன்மத<br>மலர் 2 | தமிழ்<br>**திங்கள் வெளியீடு.** | மாசி<br>இதழ் 2 |
| --- | --- | --- |


**கடவுள் வாழ்த்து.**

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீசன் எந்தை இணையடி நீழலே. தேவாரம்

தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோன் மக்களுக்கு நன்மைசெயத்—தாயாகும்
உண்ணு முலையாம் உமைசேர் ஒளிப்பிழம்பாம்
அண்ணு மலைதுணையா மால்.

## நமது பத்திரிகை.

நம் நாடு தற்காலம் பின்னணியில் நிற்கின்றது. காரணம் சுமார் 150-ஆண்டுகளாக பிறநாட்டு ஆட்சியின் கீழிருந்தோம் சமீபத்தில் சுதந்திரம் பெற்றோம். பெற்றும் இன்னும் நாம் அம்மேல் நாட்டு மோகத்திநின்றும் நீங்க இயலவில்லை. ஏன்? பலநாள் பழகி விட்டோம். பழக்கம் கொடிது. அம்மோகத்தினின்று நீங்கச் சமயம் ஒன்றே பேருதவி செய்யும். ஆதலின் "சமயத்துறையில்" உழைக்க முன்வந்தோம். சங்கத்தைத் தோற்றுவித்தோம். பத்திரிகை ஒன்றை ஆரம்பித்தோம். பத்திரிகை படிக்காதவன் பாதி மனிதன். ஆடை உடுக்காதவன் அரை மனிதன் என்ற முறையிலே நம் நாடு வளர்ச்சி யடைந்து வருகின்றது பத்திரிகையின் மூலமாக. சமயவளர்ச்சியைப்

பரப்ப வேண்டிய அவசிய நிலையைநோக்கி இப்பத்திரிகையை சமயாபி மானிகளும், ஞானிகளும், போற்றவேண்டியதும். செல்வர்கள் போற்றிப் பொருளுதவி புரிந்து ஆதரிக்க வேண்டியதும் இன்றியமையாததாகும். சென்ற காலத்தின் பழுதிலாத்திறனும் இனி எதிர் காலத்தின் சிறப்பும் தற்காலத் தொண்டைப் பொறுத்துள்ளதாகும்; சென்ற காலத்தையும் எதிர்காலத் தையும், பிணைத்து நிற்பது நிகழ்காலமேயாகும். எதிர்கால இளைஞர்களே விழித்தெழுங்கள். உங்கள் வாழ்வு செம்மைபெற சுவைபெற நிகழ்காலத்தில் சமயத்துறையில் உழையுங்கள். பத்திரிகை யைப் பரப்ப முன்வாருங்கள், என்று அறைகூவி அழைக்கின்றோம். காலம் கருதி கைகூடும் வரை உழைமின். ஒன்றே செய்யவும் அவ்வொன்றும் நன்றே செய்யவும் அந்நன்றும் இன்றே செய்யவும் அவ்வின்றும் இன்னே செய்யவும், என்ற கபிலர் வாக்கின்படி நல்லது செய்ய இன்றே விரைந்து வாருங்கள்,

நாடு நலமுறும்
அன்பு செழிக்கும்
ஒழுக்கம் வளரும்

# " துறவு "

தவத்திரு. ஐயாறு அடிகள்
(சித்தபாலைய தேசிக ஆதீனப்புலவர், பழநி.)

முன் (ம 2 இ 1 ப 20) தொடர்ச்சி.

தனது உடம்பினைப் பெருக்குதற்குப் பிறிதோர் உயிரினைப் பிரித்து அதன்ஊனை உண்பவன் அருளினை ஒருக்காலும் கொள்ளான். உலகம் தோன்றிய காலத்திலே மக்கள் தோன்றிய காலத்திலே ஒருவரும் ஊனினை யுண்ணவில்லை. கிழங்கு, காய், பழம், இலை இவற்றையே யுண்டனர். நாளடைவில் ஊன் உண்ணல் என்னும் பழக்கம் உண்டாயது. ஒரு நாட்டவன் மற்றொரு நாட்டிற்குச் சென்றான். அந்நாட்டவரில் ஒருவனுடன் கலந்துபழகினான். அவ்விருவரும் ஒருநாள் பேசிக்கொண்டிருந்தபோது தத்தம் நாட்டியல்பினைப் பற்றிப் பேசினர். வந்தவன் தனது நாட்டில் ஊன் உண்ணும் பழக்கம் உண்டு என்றான். மற்றவன் நமது உணவிற்கு என்று இயற்கையாகவுள்ள கிழங்கு, காய் முதலியவற்றைக் கடவுள் அளித்திருக்கவும், பிறிதோர் உயிரினைக் கொன்று ஊனுண்ணும் கொடிய பழக்கமும் வந்ததே என வருந்தினான்.

பொருள்தனைப் போற்றிவாழ் என்றபடி போற்றாதார்க்குப் பொருளாட்சியின்றாம். அதுபோலவே ஊனுண்பார்க்கு அருளாட்சியின்றாம். ஆயுதத்தைக் கைக்கொண்டவன் நெஞ்சம் ஏதாவதொன்றைக் கொல்லவேண்டும் என்றே நினைக்கும். அதுபோல ஒருயிரின் உடலைச்சுவைபெற உண்டவர் நெஞ்சம் நன்மையை நாடாது. அருள் யாதோ என்றால் கொல்லாமை. அல்லது யாதெனில் கொல்லுதல். ஒருயிரைக்கொன்று ஊன் உண்ணல் நன்மையாகாது. ஊன் உண்ணாமை யென்னும் ஒப்பற்ற பேரறத்தின் கண்ணே நிலைபெற்றவுயிர்கள் உவந்து உள்ளனவாம். ஊன் உண்ணலை மேற்கொள்வாரைத் துன்பம் விடாது. குற்றமில்லாத தூய அறிவினை யுடையவர்கள் உயிர் நீங்கிய உடம்பை உண்ணமாட்டார்கள். யாதொருயிரையும் கொல்லாதவனாய் புலால் உண்ணாதவனுமாய ஐம்புலனையும் அடக்கியாளும் திறம் இல்லாதவர்கள் உலகவரை வஞ்சித்து ஒழுகவேண்டுமென்றுகருதி உரவோர் மேற்கொள்ளத்தக்க தவவேடத்தினை மேற்கொண்டு பிறர் அறியாமல் தீய செயல்களையே செய்கின்றனர். இவர்களது தீய செயல்களைப் பிறர் அறிந்துவிட்டால் இப்போலி வேடத்தவரை தூற்றித் துன்புறுத்துவர். எனவே இவர் புலித்தோல் போர்த்து மேய்ந்த பசுவினையே ஒப்பவராவர்.

"வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று" —திருக்குறள்
கூடா ஒழுக்கம் 3.

தவக்கோலமாய போர்வையால் தம்மை மறைத்து நெறியல்லாதன செய்பவன் புதருக்குள்ளே மறைந்து பறவைகளைப்பிடிக்கும் வேடனையே ஒப்பாவான்,

அகச்சார்பு புறச்சார்பு என்னும் இரண்டனையும் சிறிதும் விடாமல் பற்றற்றுத்துறந்த பெரியோரது கோலத்தை மேற்கொண்டு எல்லாப்பற்றுக்களையும் முற்றத்துறந்துவிட்டேன் என்பதாக அயலவர் நம்பும்படி பேச்சளவிலே பேசி துறவொழுக்கத்திலே நில்லாமல் புறவொழுக்கத்திலே நிற்பவர் உலகில் உளர். இன்னவர் உலகிற்கும் தமக்கும் பகையாவர். உள்ளத்தால் துறவாமல் துறந்தாரைப்போல வெளிக்குக்காட்டி வஞ்சகம் செய்து வாழ்பவரே மிகவஞ்சகராவர். யாழானது பார்வைக்கு வளைந்ததாக இருக்கின்றது எனினும் இசையால் கேட்பவரை இன்பத்திற்கு ஆளாக்குகின்றது. அதுபோல பார்வைக்கு என்னவோ போலத்தோன்றினும் தம் செயலால் உலகினை இன்புறுத்தும் உரவோருமுளர்.

பிறர், தன்னை இகழாமல் இருக்கவேண்டும் என்று கருதுபவன் தன்னெஞ்சிலும் களவினைக்கருதாமல் இருத்தல் வேண்டும். பிறர் பொருளை வஞ்சனையால் களவுகாண வேண்டுமென்று உள்ளத்தால் உள்ளலும் தியதேயாகும். களவினால் உளதாய ஆக்கம் அளவு கடந்து வளர்வதுபோலக்காட்டி, களவினால் தன்னைக் கொண்டவனையும் கெடுத்துத்தானும் அழியும். பிறர் பொருளைக் களவு காண வேண்டுமென்று கருதிப் பொருளையுடையாரது சோர்வினைப் பார்ப்பவர், அருள் கருதி அன்புடையராதல் இலர், களவிலேயே காதல் செய்தொழுகுபவர் தமக்குரிய சிரிய நிலையிலே நிற்க ஆற்றாதவராவர். களவு என்னும் தியஅறிவு தமக்குரிய அளவில் நின்றவரிடத்தின்றும் தமக்குரிய அளவினை அறிந்தார் நெஞ்சிலே அறம் நிலைத்து நிற்பதாகும். அதுபோலவே களவினையறிந்தார் நெஞ்சிலே வஞ்சகம் நிலைத்து நிற்பதாகும். களவு அல்லாத ஏனையவற்றை அறியாதவர். அதாவது களவினையே அறிந்தவர். அளவற்ற தீய செயலாம். களவு செய்யின் அப்பொழுதே அழிவர். உள்ளத்தும் களவில்லாத உண்மைத் துறவியர் எக்காலத்தும் மேலான பேரின்பப் பெருவாழ்வினையே பெறுபவராவர்.

**வாய்மை:** வாயின் தன்மை. வாயின் தன்மையாதோ என்னின் கேள்வியினும், வினையினும், இனிமை தருவதாய சொற்களையே பேசுதலும், புறங்கூறாமையும், பயனில பகராமையும், பொருளொடு பொருந்திய மொழிகளையே மொழிதலும்ஆய நல்ல சொற்களையே

பேசுதலாகும். யாதொரு வகையாலும் எவ்வுயிர்க்கும் தீமைபயவாத சொற்களைப் பேசுதலே வாய்மையாம். கண்ணினுற் கண்டதொன்றனைப்பேசுமிடத்து அப்பேச்சு தீமைதருமேல் அதுவாய்மையாகாது. ஒருவனை ஒருசிலர் இவனை அடித்துக்கொல்லவேண்டும் என்று கருதித்துரத்திவந்தனர். துரத்தப்பட்டவன் அஞ்சி ஓடினுன். ஓடும் வழியில் சிலரைக்கண்டு ஐயன்மீர் என்னை அவர்கள் கொன்றுவிடுவார்கள் நான் இங்கே ஒளிந்துகொள்கின்றேன் என்றுகூறி மறைந்துகொண்டான். துறத்திவந்தவர்கள் அவ்விடம்வந்து இவ்விடம் ஓடிவந்தானே அவன் எங்கே என்றனர். அவர்கள் இங்கே ஒருவனும் ஓடிவரவில்லை என்று உரைத்தார்கள். வந்தவர்களும் வந்தவழியே போய்விட்டார்கள். கண்டதைக் கண்டபடியே கூறியிருப்பின் வந்தவர்கள் அவனை அடித்துக்கொன்று கொலைக்குற்றத்திற் காளாகியிருப்பார்கள். கண்டதைக் கூறியவர்களும் அக்குற்றத்திற்காளாய் இருப்பார்கள். இவர்கள் கண்டபடியே கூருமல் இருந்த அதனுல் அஞ்சி ஓடிவந்தவனும் உயிர்பிழைத்தான். கொல்லவந்தவர்களும் கொலைக் குற்றத்திற்காளாகவில்லை பாருங்கள். எந்தவகையாலும் யாருக்கும் தீமைபயவாததும் நன்மையே பயப்பதுமாய சொற்களே வாய்மையாம். உள்ளத்தாற் பொய்யா தொழுகுமொருவன் உயர்ந்தோர் உள்ளத்திருக்கும் உயர்ந்தோனுவன். உள்ளத்தும பொய்யையில்லாத தன்மையே உண்மையென்று உரைக்கப்படுவது. வாயின்தன்மை-வாய்மை.உள்ளத்தின் தன்மை-உண்மை. உண்மையாளனையே உயர்ந்தோர் உள்ளத்தே வைத்துப்போற்றுவர். உள்ளத்தொடு பொருந்த உண்மை உரைப்பவன் தவமும் தானமும் செய்பவரினும் உயர்ந்தவன் ஆவன். நல்லநீரால் உடம்பு தூய்மையுறும். உடம்பு தூய்மையுறவே உள்ளம் தூய்மையுறும். உள்ளமும் தூய்மையுறவே மொழியுந்தூய்மையுறுவதாகும். உள்ளம் தூயதென்பதனை வாய்மையே காட்டிவிடும். சான்றோர்கள் உலகிலுள்ள விளக்குகளை விளக்கென கருதமாட்டார்கள். பொய்யாவிளக்காகிய மெய்யாம் விளக்கினையே விளக்கென்று கொள்வர். வாய்மையைப்பார்க்கிலும் நன்மையாக உள்ளன வேறு எவையும் இன்றும். உள்ளத்தின் கூளவாகிய நற்பண்புகளை எல்லாம் கவர்ந்து எழுந்து ஓங்கும் சினத்தை மேலெழாமற் காப்பாற்றிக் கொள்ளும் குணமே சிறந்த குணமாகும். தம்மைப்பிறர் எவ்வளவு தான் இகழ்ந்து பேசினுலும் பெரியோர்கள் சினம் கொள்ளமாட்டார்கள். தமக்கெவ்வளவு தீமை செய்யினும் அதற்கெதிராக வெகுண்டு துன்பம் செய்யமாட்டார்கள் தூயோர்.

"தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்யசிந்தைப்
பேரறி வாளர் தத்தம் செய்கையிற் பிழைப்பரோ."

—என்றூர் கம்பநாடர்.

ஒருவனது சினமானது அவனினும் தாழ்ந்தவனிடத்தே தடையின்றிச் செல்லவல்லதாகும், அவனை ஒத்தவனிடத்தே சென்றுல்

தன்னையுடையவனுக்கே துன்பந்தரினும்தரும். அவனைவிட வலியவனிடத்தே சென்றால் தன்னையுடையவனுக்கே துன்பம் தருவதாகும். எனவே தனது கோபம் செல்லக்கூடிய இடத்துச் செல்லாமல் அதனைக்காப்பவனே சினம் காப்பவன். தனது சினம் செல்லக்கூடாத இடத்துச் செல்லின் சினத்தை யுடையானுக்குத் தீயதே உளதாம். எல்லாத் தீமைகளும் சினத்தால் உளவாகும். அதனால் யாவரிடத்தும் உளவாம் வெகுளியினை மறத்தல் வேண்டும். நகைப்பு மகிழ்ச்சி என்றிவற்றை அழிக்கும் சினமே. ஒருவனுக்கு வேறு பகை யின்றாம். ஒருவன் தன்னைக்காப்பாற்ற வேண்டுவானானால் தன்னிடம் சினம் தோன்றாதபடி காத்தல் வேண்டும். காப்பாற்றவிட்டால் சினம் அவனையே அழித்துவிடும். எரிதோய்ந்தாற் போன்ற தீமையைப் பிறர் தமக்குச் செய்தாலும் வெகுளாமையே நன்மை தருவதாகும். உள்ளத்தில் வெகுளியினை உள்ளாதவன் நினைத்த நன்மைகளை நினைத்தவாறே அடைவான்.

மிகச் சிறந்த பேற்றினைப் பெறுவதாயினும் பிறர்க்குத்துன்பம் செய்யாமல் இருத்தல் வேண்டுமென்பதே குற்றமற்ற தூயோர் கொள்கை. கோபித்துக் கொடிய துன்பத்தினைப் பிறர் தமக்குச் செய்த விடத்தும் மீண்டும் அவர்கட்கு இன்னா செய்யாதிருக்க வேண்டும் என்பதே குற்றமற்றார் கொள்கையாகும். தமக்கு இன்னா தனவே செய்தவரைத் தண்டித்தல் அவர்கள் நாணுறுமாறு அவர்கட்கு நன்மைகளையே செய்து பின்னர் அவர்கள் செய்த தீமையினையும் மறந்துவிடலே யாகும். துன்பந் தருவனவென அறிந்த செயல்களைப் பிறர்க்குச் செய்யாமையே சாலச்சிறந்ததாகும். எந்தக் காலத்திலும் எந்த வகையினாலும் யாருக்கும் மாட்சிமையின்றிய துன்பம் செய்யாமை தலைமையாயது. பிறருக்குத் துன்பத்தினை முற்பகல் செய்யின் பிற்பகல் செய்தவனை நாடி அத்துன்பம் தானே வந்தடையும் "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" —ஔவையார்.

ஒருவன் தனது நண்பனுக்கு நல்லவிருந்து செய்ய வேண்டும் என்று எண்ணினான். இன்னநாளிலே எனது வீட்டிலே வந்து நான் செய்யும் விருந்தினை ஏற்றுக்கொள்ள வேண்டும் என வேண்டினான். நண்பனும் அப்படியே ஒத்துக்கொண்டான் நண்பனுக்கு விருந்து செய்வதற்கு நல்ல முறையில் உணவுகளைத் தயாரித்தான். தயாரிக்கும் போதே உணவுவகைகள் செவ்வையாக அமைந்துள்ளனவாவென்றறிய உண்டு சுவைபார்த்து மகிழ்ந்தான். சந்தனம், பூ, தாம்பூலம் முதலிய தயார் செய்தான் அவற்றையும் நேர்மையான சந்தனமா, பூவா, தாம்பூலமா என்றெல்லாம் பார்த்து உவந்தான் குறிப்பிட்ட நாளிலே நண்பனுடனிருந்துண்டும், பூசியும், சூடியும் தரித்தும் மகிழ்ந்தான், பின்பொரு நாள் தனது நண்பனால் தானும் உபசரிக்கப் பெற்றான். முற்பகல் செய்த நன்மையைப் பிற்பகல் பெற்றான் இவன்.

(தொடரும்)

சைவசித்தாந்தம்

# சிவஞானபோதம்.

திருநீ. சண்முகாநந்த சுவாமிகள்,
(கலைமகள் தமிழ் நிலையம், மதுரை.)

முன் (ம 2 இ 1 ப 14) தொடர்ச்சி.

## 2-ம் சூத்திரம், 4-ம் அதிகரணம்.

"ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே" என்பது மூன்றும் அதிகரணத்தில் உயிர்கள் மீளப்பிறந்து வருமென்றதனால், அங்ஙன் பிறக்குமிடத்து ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லையாகலின், சங்கார கர்த்தாவே வினைமுதலாவன் எனச் சிறப்புவகையான் வலியுறுத்தியவழி. இரண்டா மதிகரணத்து இறைவன் ஆணையாகிய சத்தியால் இருவினையும் வருமென்றமையால் சத்தியும் ஐந்தொழில் செய்யுமென்பது பெறப்படவே அஃதிறைவியாவான் சேறலின், அத்தொழில் செய்தல் இறைவனுக்கே யுரிய சிறப்பிலக்கணமென்றல் பொருந்தாதென்னும் ஆசங்கையினையும், அச்சத்தி இறைவனின்வேறோ அன்றோ என்னும் ஐயம் நிகழ்ந்தவிடத்து பொருட்குச் சத்திவேறென்னும் மீமாம்சகர்மதம் பற்றியும்,வேறன்றென்னுந் தார்க்கிகர்மதம் பற்றியும் வரும் ஆசங்கைகளையும் நீக்கும் வாயிலாய் இறைவனுக்குச் சிற்சத்தியாகிய துணைக்காரணமுண்டென்பதற்குப் பிரமாணம் கூறுதற்கெழுந்தது இவ்வதிகரணமெனக் காண்க.

இனி "ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" எனக் கூட்டாது "நீக்கமின்றி அவையே தானேயாய் நிற்கும்" எனக் கூட்டியுரைப்பாருமுளர். அது பொருந்ாது, என்னை; நீக்கமின்றி நிற்குமெனப் பொதுப்படக் கூறினமையான் யாதென்னின் நீக்கமின்றி நிற்குமென அவாயவிடத்து, அண்மை கண்ணின்ற ஆணையென்பது வந்தியைவதன்றி மற்றையவை வந்தியைவதற்கோர் சம்பந்தமின்மையானும், இறைவன் உயிர்களில் வியாபித்து நிற்றல் "அவையே தானேயாய்" என்னுமதி காணத்தாற் கூறிச்சென்றமையின் அதனை மீண்டுங் கூறுதல் குற்றமுடைத் தாகையானும், அஃது ஆசிரியர் கருத்தன்றாகையால். மேலும வடமொழிச் சூத்திரத் திறுதியில் "சமவேதை" என ஆணையை விஷேடித்துக் கூறுதலின், அதனையோ ரதிகரணமாகக் கொண்டுணர்த்த வேண்டுமாகலின், அங்ஙன் உணர்த்தாக்கால் குன்றக் கூறலாய் முடியுமாகலானும் "அந்நியயோக வியவச்சேதம்" "அயோகவியவச்சேதம்" என்னும் வடசொற்கள் "பிறிதின் இயைபு

நீக்குதல்'' "இயைபின்மை நீக்குதல்'' எனத்தமிழிற் பெயர்த்து வழங்கப்படுமாறு போலச் "சமவாயம்'' என்னும் வடசொல் "நீக்கமின்றி நிற்றல்'' எனத் தமிழிற்பெயர்த்து வழங்கப்படுமாகலின், "நீக்கமின்றி நிற்குமன்றே'' என்பதற்கு அதனைச் சார்த்தி யோதிய ஆணையினோடு இறைவன் சமவேதமாய் நிற்பன் எனவே பொருள் வருமாறுங் காண்க. அற்றேல், வடமொழிச் சூத்திரத்துள் "ஆணை இறைவனோடு சமவேதமாய் நிற்கும்'' என ஆணைமேல் வைத்தோதியிருக்க, ஈண்டு "இறைவன் ஆணையோடு சமவேதமாய் நிற்பன்'' என இறைவன்மேல் வைத்தோதிய தென்னை எனின்:— அவ்விரண்டும் பொருளான் வேறன்மையான் அங்ஙன் ஓதியது சாலுமெனவுணர்க.

தார்க்கிகர் முதலியோர் கூறும் சமவாய சம்பந்தமொன்றுண்டென்பதற்குப் பிரமாண மின்மையால் ஈண்டுச் சமவாய மென்றது தாதான்மியசம்பந்தமாம். அஃதாவது:—பொருளொன்றேயாயினும் ஒருவாற்ருற்பேத மாதற்குரிமை யுடைமையாம். தாதான்மியம் என்னுஞ் சொல்லிற்கு "அதுதானுதல்'' என்பது பொருளாம். ஆகவே இறைவன் ஆணையாகிய சிற்சத்தி இறைவனின் வேறின்றி அவனின் வியாப்பியமாய் நிற்றலான் ஐந்தொழில் செய்தல் இறைவனுக்கே சிறப்பிலக்கணமென்பது போந்த வாறுணர்க.

அற்றேல், ஆணையாகிய சிற்சத்தியோடு இறைவன் பேதாபேதமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பன் என்றற்குப் பிரமாணமென்னையோ வெனின்:—"அவையே தானேயாய்'' என்னும் அதிகரணத்தாற் சாதிக்கப்பட்ட, "சருவ வியாபியாய் நிற்றல்'' என்பதனையே ஈண்டு ஏதுவாகக் கொண்டு "நீக்கமின்றி நிற்கும்'' என்னும் மேற்கோளைச் சாதிக்கும் உடன்பாடும் எதிர்மறையும்ஆய அநுமானப் பிரமாணங்கள் உள்ளனவாம். அவை வருமாறு:— இறைவன் தனது சிற்சத்தியோடு பேதாபேதமின்றி அவ்விரண்டற்கும் பொதுமையாய் நிற்பன், சருவவியாபியாகலான்: யாது யாது வியாபியாய் நிற்கும் அதுவது ஒன்ருதலும் இரண்டாதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுமையின் நிற்கும்; தன் எல்லையளவும் வியாபியாய் நிற்கும் ஞாயிறு தன் கிரணத்தோடு அவ்வாறு நிற்றல்போலும், என உடன்பாட்டு முகத்தானும்; "யாது யாது அங்ஙனம் பொதுமையின் நிற்பதன்று அதுவதுவியாபியாய் நிற்பதுமன்று, குடம் போலும்'' என எதிர்மறை முகத்தானும் கூறிக் கண்டுகொள்க.

அற்றேல், கூறிய அநுமானத்துள் ஏதுவும் மேற்கோளும் தம்முள் அவிநாபாவமாமாறு (விட்டு நீங்காமையாமாறு) யாங்ஙனம் எனின்:—இறைவன் வியாபகனுகலின், வியாபகப்பொரு ளொன்ருய் நிற்றல் கூடாது. என்னை, கங்கைக் கரையின் நின்ற வொருவனே காவிரிக் கரையினும் ஒருங்கே நிற்கமாட்டான். அதுபோல ஒரு பொருள் ஓரிடத் துளதாதலன்றி யாங்கணும் வியாபித்து நிற்க மாட்

டாதென்பதாம். அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பன் எனின்:— வியாபகனுதல் கூடாது. என்னை, தன்னிடத்தே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருளின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் பொருந்தா தென்பதாம். இவ்விரண்டோடும் முரணுதலின் வியாபகன் அல்லன் எனின்:—எவ்விடங்களிலுமுள்ள எத்திறப்பொருளுமாகிய பசு பாசங்கள் "அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லை" யாமாறுபோல அவ்விறைவனையின்றியமையா வாகலான் வியாபகன் அல்லன் என்றல் பொருந்தாது. இங்ஙனமாகலான் வியாபகனுகிய இறைவன் ஞாயிறும் ஒளியும்போல ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தாற் சிவமும் சத்தியுமென்று இயைந்து நிற்பன்.

அற்றேல் பசுபாசங்களையும் வியாபகமெனக் கொள்ளுதலின் அவையும் இம்முறையே ஏகாநேகமிரண்டுமின்றி இறைவன்போலத் தத்தஞ்சத்திகளோடு தாதான்மியமாய் நிற்கும் என்பது பெறப்படுதலான் இறைவனெடொப்பாவான் செல்லுமெனின்! அவ்வாருயினும் இறைவனது வியாபகத்தை நோக்க அவைவியாப்பிய மாகலின் அப்பாசங்கள் உடைமையாமென்றும், பசுக்கள் அடிமையா மென்றும், மேற்கூறிப் போந்தமையின் அவை இறைவனெ டொப்பாவான் செல்லாஎனக் காண்க.

அற்றேல் அஃதங்ஙனமாக, ஒருபொருளே தாதான்மியத்தான் இருவகைப்பட்டுப் பொதுமையினிற்றல் யாங்ஙனமெனில்:-ஒன்றுகிய ஞாயிறே தன்னையும் புறவிடயங்களையும் விளக்குமேனும், தன்னைவிளக்குங்கால் கதிரோனெனவும், விடயங்களை விளக்குங்கால் கதிரொனவும் தாதான்மியத்தால் இருவகைப்பட்டியைந்து நிற்குமாறுபோல பேரறிவாகிய வொன்றுகிய சைதன்னியமே புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்கும் நிலையில் சிவமெனவும், புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் சத்தியெனவும் இருவகைப் பட்டியைந்து குணி குணமாய் நிற்குமென வறிக.

இனித் தீயின் சத்தியொன்றே சுடுதல்முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி யென்பனவாகப் பல்வேறு திறப்படுமாறுபோல, சிவசத்தி யொன்றே காரியவேறுபாட்டால் பல்வேறு திறப்பட்டு நிற்கும். எவ்வாறெனின்:- பரை, ஆதி, இச்சை, ஞானம் கிரியை என்னு மைவகைச் சத்திகளாயும், சசினி, அங்கதை, இட்டை மரீசி, சுவாலினி, என்னுமைந்து கூறுபாட்டோடு கூடிய, ஈசானி சத்தியாயும், சாந்தி, வித்தை, பிரதிட்டை நிவர்த்தி, என்னும் நான்கு கூறுபாட்டோடு கூடிய, பூரணி சத்தியாயும், தமை, மோகை, சயை நிட்டை, மிருத்தியு, மாயை, பயை, சரை என்னும் எட்டுக் கூறுபாட்டோடு கூடிய, ஆர்த்தி சத்தியாயும், இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சம்யமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராம்மணி மோகினி, பவை, என்னும் பதின்மூன்று கூறுபாட்டோடு கூடிய

வாமை சத்தியாயும், சித்தி, இருத்தி, தியுதி, இலக்குமி, மேதை காந்தி, சுவதை, திருதி, என்னும் எட்டுக் கூறுபாட்டோடு கூடிய மூர்த்தி சத்தியாயும், ஆரணி, செனனி, இரோதயித்திரி, என்னும் மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை, என்னும் ஐவகைச் சத்திகளாயும், வாமை சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, என்னும் எண்வகைச்சத்திகளாயும், நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பல்வேறு திறப்பெயர் பெற்று நிற்கும். இவற்றின் இயல்பெல்லாம் ஆகமங்கள் விரித்தியம்பும். இச்சத்திகளின் பேதமனைத்தும். இலயம் போகம், அதிகாரம் என மூன்றுய் அடங்கும். இவற்றின் விரிவனைத்தும் சிவஞானமாபாடியத்துட்கண்டுதெளிக. ஈண்டு விரிக்கிற்பெருகும்.

இனித்தொடர்ப்பாட்டானே காரகசத்தி, ஞாபகசக்தியாகிய இரண்டனையும்பற்றிச் சிறிது கூறுதும்:— தீ, நீர், குடம், முதலிய ஏகதேசப் பொருள்களும் தாந்தாஞ் செய்யுங் காரியத்தளவில் வியாபித்தலுடைமையின், அங்ஙன் வியாபித்தல் பிரிதொன்றுற் பெறப்படாமையால் அவை தத்தங் காரியங்களில் வியாபித்தற்குரிய காரணவடிவமாய் நிற்குந்தன்மையும், தத்தம் இயல்பில் நிற்குந்தன்மையும் என்னும் இருதன்மையும் உடையனவாமென்பது பெறப்படுதலின், அங்ஙனம் காரணவடிவமாய் நிற்பதாகியசத்தி அவ்வப்பொருள்கடோறும் தாதான்மியத்தா னுண்டாகலின் அதுவே காரகசத்தியாம். இதனையே பொருட்சத்தியென்றுங் கூறுவர். இதனுனே சத்தியென்பதொன்றில்லை யென்னும் தார்க்கிகர் முதலியோர்மதம் ஈண்டைக் கேலாமையுணர்க.

தீயின்சத்தி அதனின் வேற்றுமையின்றி உடனுய் நிற்றலின் தீப்போலக் காட்சியளவையிற் றுணியப்படாதாயினும், அருத்தாபத்தியளவையான் வேருத் துணியப்படுதலின் அத்தன்மைத்தாய சத்தியுண்டென்பது போதரும். எங்ஙன் எனின், தீத் தன்னைத் தீண்டியவழிச் சுடுதலும், பின்னொருவன் உச்சரிக்கும் மந்திரத்தாற் சுடாமையும் உலகப்பிரசித்தம், மந்திரசக்தியால் மறைந்தும் அஃதில் வழி விளங்கியும், சுடுதற்றொழிற்குக் காரணமாய தோர்சக்தி அத்தீயின் வேறுண்டென்பது துணியப்பெறும்.

இனிக் காரகசத்தியுடைய அவ்வப்பொருள்களை எழுத்தானியன்றசொல்லால் அறிவிக்குஞ்சத்தி ஞாபகசத்தி யெனப்படும். இதனையே வாக்குச்சக்தியெனவுங்கூறுவர். அந்றேல், எழுத்துக்களாவது அவற்றுனியன்ற பதங்களாவது, அப்பதங்களானியன்று அவாய்நிலை தகுதி, அண்மைகளோடு, எழுவாய், பயனிலைமுதலியனவாய்த் தொடர்ந்துள்ள வாக்கியங்களாவது, அவ்வப்பொருளை யறிவிக்குமெனக்கொள்ளாது, அவற்றின்வேருய்ப் பொருளை யறிவிக்கும் ஞாபகசத்தி யுண்-

டென்ப தென்னையெனின்!—அற்றன்று, கால், என்றவிடத்துக் ககர ஆகார லகர எழுத்துக்களே யன்றி அவற்றின் வேறுய்ப் பத மென்ப தொன்றின் மையானும். அவ்வாறே, "கால்கிடந்தது" என்றவிடத்து அப் பதங்களின்வேறுய்வாக்கியமென வொன்றின்மையானும், எழுத்துக் களே பொருள்உணர்த்துவனவன்றிப் பதவாக்கியங்கள் பொருள் உணர்த்தாவெனக் கொள்ளுதல்வேண்டும். அங்ஙனம்கொள்ளுமிடத்து அவ்வெழுத்துக்கள் ஒருங்குகூடியாவது தனித்தனியாவது பொருள் உணர்தல்வேண்டும். ஒருங்குகூடிப் பொருளுணர்த்துமெனின், ஓசை, உணர்வு, தொழில், ஆகியமூன்றும் முக்கணப்பொழுதேநிலைபெறுமென் பது தார்க்கிகர்முதலியோருக் குடன்பாடாகலின், முறையேமுதற்கணத் துப்பிறந்து, இரண்டாங்கணத்துநின்று, மூன்றுங்கணத்துக்கெடும் எழுத் துக்கள் ஒருங்குகூடிநின்று பொருளுணர்த்துமெனல் பொருந்தாது. ஓரோவொன்றே பொருளுணர்த்துமெனின் "க" என்ற மாத்திரையே கம்பலம் என்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்து மெனின் ககரமொழிந்த எழுத்துக்களை உச்சரித்தல் பயனிலவாய் முடியுமாக லானும், ஒரேவொன்றே பொருளுணர்த்து மென்பதும்பொருந்தாமை யின், எழுத்துக்களின் வேறுய்ப் பொருளை யறிவுறுக்கும் ஞாபகசத்தி யுண்டென்பதை யோர்ந்துணர்ந்து கொள்க. இச்சத்திகளின் சங்கை சமாதான விரிவனைத்தும் சிவஞான மாபாடியத்துட் காண்க.

இவ்வதிகரணத்தில், இறைவன் வியாபகமாதல் பிறிதொன்ருற் பெறப்படாமையின், அருத்தாபத்தி யளவையாற் றன்னின் வேறின் றியும் வேருகிய தாதான்மிய சத்தியை யுடையான் என்று சிவசத்தி யுண்மைக்குப் பிரமாணம் கூறப்பட்டது, படவே, ஆன்மா, மாயை மல கன்மங்களும் அவ்விறைவன் போல வியாபகமாகலின், அவையும் அவ்வளவையானே, தத்தமக்குரியதாதான்மியசத்திகள் உடையன வென்பதும்; அங்ஙனமாயினும் தூலசூக்கும முறையின் வியாபக வியாப்பியங்களாய் நிற்றலின், அவ்வவ் வியாப்பியப் பொருள்களின் சத்திகள் அவ்வவ் வியாபகப் பொருட் சத்தினின் அடங்கு மியல் பினவன்றி, ஒத்த இயல்பினவல்ல வென்பதும் பெறப்பட்டன. கூறிய கருத்துக்களனைத்தையும்,

"எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க
ணவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளானா மங்கு. —எனவரும்

மெய்கண்ட தேவநாயனர் திருவாக்கானுணர்க.

(தொடரும்.)

# அவிரோத வுந்தியார்.

தவத்திரு. சுவாமி முக்தானந்தா அவர்கள்,
(சங்கமூர்த்தி ஆனந்தாஸ்ரமம், வியாசர்பாடி, சென்னை.)

முன்(ம 2 இ 1 ப 5) தொடர்ச்சி

**புறப்பற் றென வொன்று, பொருந்து வதே யில்லை**
**உறப்பற்றி மெய் தன்னில், உறங்கு வோர்க்கே யெனல்.**

நீர்க் குமிழி போன்று நிலையற்றதும், கானல் நீர் போன்று கரை புரண்டு தோன்றுவதும், மனம் முதலியவற்றை வலிந்திழுத்து மயக்குவதுமாய் உள்ளது; புறப்பற்றெனப் படுவது. இதன் வழியே செல்லுவோரைத் தலையெடுக்க வொட்டாமல் தாழ்த்தி, அமிழ்த்தி விடுவது. கரையேறு வண்ணம் கட்டியீர்ப்பது தனதென்று பற்றிய வனைத், தவிக்க விடுவது. போற்றிக் காத்தவனைப், பொலி விழக்க வைப்பது. நம்பி அடைந்தவனை, நலமிழக்கச் செய்வது. முனைந்து பற்றியவனை மூலையில் முக்காடு இட்டு அழும்படிச் செய்வது, இதுவே புறப்பற்றென்னும் பெயரால், பொருளொன்றும் இல்லாதது.

இப்படிப்பட்ட தன்மை வாய்ந்துள்ள, இதனைத் தூரத்தே களைதல் வேண்டும். களையினும் போதாது. மீண்டொருபோதுந் தீண்டாமல் விடுதல் வேண்டும். எண்ணத்தாலுந் தொடுவது, இழி வென ஒதுக்குதல் வேண்டும். கொடிய நோயுற்றோன் கொள்ளும், கடும் பத்தியம் போன்று, விட்டால் மட்டும் போதாது; மற்றோ?

தத்துவங் கடந்த தனிப்பெரும் பொருளைத் தானென உணர்தல் வேண்டும். சிவமே நானெனத் தெளிதல் வேண்டும். மறைகளுங் காணு மாண்பாய், அமைதல் வேண்டும். ஓங்குபரமாய் உறைதல் வேண்டும். உணர்விறந் தோங்கும், ஒளியாய் மிளிர்தல் வேண்டும். அலைவற விரிந்துள அறிவாய் நிலைத்தல் வேண்டும். காணாது காணுங் காட்சியாய் மிளிர்தல் வேண்டும். எங்குஞ் செறிந்த இன்பமாய் இலகுதல் வேண்டும். எல்லா மிறந்த இடமாய் இருத்தல் வேண்டும். மேகங்கள் ஒழிந்த வெட்ட வெளிக்கும் வெளியாய்த், தானாகிய ஆன்மவடிவாய், அசை வற, அயலற, நிற்றல் வேண்டும்.

இங்ஙனம், சிந்தையும் இறந்த தெளிவாய் நிலைத்தபோழ்தே, உள்ளென்பது எங்கே? பற்றென்ப தொன்று எங்கே? இவைக் கிடமாய்த் தோற்றும் பருவுடம்பு உண்டென்பது எங்கே தோன்றும்? இதை நானென்று கொள்ளுவதும், இது மெய்யுணர் விற்குத் தடை

யென்பதும், வீணான புரளியாகும். முயற் கொம்பு போன்ற, சொல்லளவேயாக வழக்கத்திலுள்ள இதில் மனவெழுச்சிக்கு இடமேது? மனவெழுச்சிதான் முன்னரே மாண் பொருளில் மாய்ந்துவிட்டதல்லவா? தீயைச்சோதிக்கச் சென்ற செம்பஞ்சு போன்று, திரும்பி வருவது இல்லை யல்லவா? வந்தபொழுது தானே உடம்பில் நானெனும் பற்று வைக்கப் போகின்றது, அது திரும்பி வாராது உறுதி.

ஆதலால், உடம்பை நானெனும் உட்பற்று, தேடுவார் அற்றதாய், இடமும் இல்லாததாய் பொருளற்றதாய் இருக்க, இதனை 'ஓடும்' எனச் சொல்வது, பழக்கச் சொல் (உபசாரச் சொல்) லெனத் தெளியும் வண்ணம், சுவாமிகள் அருளியுள்ளதை அவிரோத உந்தியாரில் காண்பாம்.

(கரு) அ—உந்தியார்:—

புறப்பற் றெலாந்தூரப் போக்கிமீட் டெண்ணாது
உறப்பற்றின் மெய்யுணர்வு உந்தீ பற
ஓடும் அகப்பற்றென்று உந்தீ பற.

பொழிப்பு:—

புறப்பற்று எல்லாம், தூரப் போக்கி, மீட்டு (ம்) எண்ணாது, மெய்யுணர்வு (வில்) உறப்பற்றின், அகப்பற்று ஓடும், என்று உந்திப்பற. உந்தீ பற,

பொருள்:—

'புறப்பற்று'— (மண் பெண் பொன் முதலாய என்னுடையன என்று, கருதப்படுகின்றவையாகவுள்ள) வெளிப்பற்றுகள், 'எல்லாம்'— எல்லாவற்றையும், 'தூரப்போக்கி'—தொலைவா யிருக்கும்படி விலக்கி விட்டு, 'மீட்டும்'— (விட்ட அவற்றைத்) திரும்பவும், 'எண்ணாது'— மனதில் நினையாமல் (நினைவில் வாராவண்ணம் செய்து கொண்டு) 'மெய்யுணர்வு'—(புலன்கள் மேற்செல்லும் அறிவெனப் படுவதை, இயக்கியும், அடக்கியும், அதனை அறியும் அறிவு வேறென்று இன்றி, விளங்குவதும்; என்றும், எங்கணும் நிலைத்து உள்ளத்தும் ஒளிரும் தானெனும்) மெய்யுணர்வாம் ஆன்மாவை, 'உறப்பற்றின்'— (பதைப்பற) அழுந்திப்பற்றி நின்றால், 'அகப்பற்று'—(உடம்பை யானெனும்) உட்பற்றானது, 'ஓடும் என்று'— (இருந்த இடமும் சென்ற விடமும் தெரியாமல்) மறைந்தொழியும் என்று, பாடிக் கொண்டே உந்திப் பறவுங்கள், சிறுமியர்காள்! உந்திப் பறவுங்கள்.

*ஊழ்வலியால் உற்று, பயன் தருவதற்குச் சூழ்ந்துள்ளவற்றில், என வெனும் பற்று, இல்லாமல் விட்டொழிப்பினும், மெய்யுணர் வுடையார்க்கே, உட்பற்றொழியு மென்பதை உரைத்த தாகின்றது.*

*எடுத்துக்காட்டு:—*

**திருவள்ளுவர்:—**

இயல்பாகு நோன்பிற்கொன்று இன்மை; உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து

**ஒழிவிலொடுக்கம்;—**

கரையடுக்க வந்தால் திரையலைக்கும் கப்பல்
பொருளடுத்தால் தோன்றும் பொய்ப் போதம்—விருதினவன்
வெற்றிக் குழிகுதித்தோன்போல் வேண்டும்; விட்டதுபின்
பற்றும். அதிற் சிக்கென நிற்பாய்,

**திருவள்ளுவர்:—**

பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக, பற்று விடற்கு.

**தேவாரம்:—**

விறகில்தீயினன் பாலில் படும் நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய, முன்னிற்குமே.

**ஞான வாசிட்டம்:—**

*அஞ்ஞானம்;*

ஏகமாகிய பராபரம் தோன்றிடில் இறக்கும்.

**சிவஞான சித்தியார்:—**

ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்,
ஒருவருக்கும் யானெனது, இங்கொழியா தன்றே.
ஊற்றிடின் மெய்யுணர் வொழியுமுட் பற்றெனில்
சுற்றிய பற்றெலாந் துடைப்பதெற் றிற்கெனல்

ஒருவன், தாய் வயிற்றில் இருக்கும் பொழுதே, நான் முன்னும் பிறந்து இத்துன்பங்களில் உழன்றேன்; மீண்டும் பிறந்தேன்; பின்னர் இறந்தேன் என்று, எண்ணுகின்றான். இனியும் பிறக்கப் போகின்றேன். மீண்டும் மீண்டும் பிறப்பதும், ஊழ்வலியின்படியே, சூழும் பொருள்களில் பற்றுக்கொள்வதும், அந்தப் பற்றிற்குத் தக்கவாறு செயல்களைச் செய்வதும், அந்தச் செயல்களுக்கு உரிய பயன் எந்த இடத்தில் சேர்த்து வைக்கப்பட்டு இருக்கின்றதோ, அந்த இடத்திற்கு செலுத்தப்படுவதுமே தொழிலாகவும், அந்தத் தொழிலை ஏற்று நடப்பவனாகவும், நான் ஆவேன். மலப் புழு முதலாக, எத்தனையோ வகையான உடம்புகளோடு முன் பிறந்திருப்பேன். இன்னும் பிறக்க இருக்கின்றேன். இந்த பிறப்பு, இறப்பெனும் சுழியினுள், அகப்பட்டு விட்டேனே, ஐயோ இனி எனக்கு இத்துன்பம் போதும். இந்தத் தடவை இத்தாய் வயிற்றிலிருந்து பிறந்தவுடனே, வல்வினைக்குள் அகப்பட்டு ஆழமாட்டேன். பிறவாநெறியைப் பெறுவதற்குப் பெருமுயற்சி செய்வேன், உண்மை வழியை அறிவுறுத்தும் பெருமையுடைய, குரு பிரானைத் தேடி அடைவேன். அவரது அருளொளியால் எல்லாவற்றையுந் துறந்து, மெய்யுணர்வை அடைவேன். அசைவற்ற நிலையாகிய ஆன்ம வடிவாக, நிலைத்து நிற்பேன் என்று கருதிக்கொண்டே, கருவில் இருந்த ஒருவன்; கருப்பையிலினின்றும் வெளிப்படுத்துங் காற்றினால் தள்ளப்படுகின்றான். பிறக்குங் கருவாயிலின் நெருக்கத்தால் நெருக்கப்படுகின்றான். செத்த பிணம் போன்று ஊன் துண்டமாய், நிலத்தில் விழுகின்றான். கருவில் அடைந்துள்ள துன்பத்தாலும், கட்டவிழ்த்து விட்டபோழ்து, வருகின்ற வழியிலடைந்த வருத்தத்தாலும், முன்னுள்ள நினைவை, முற்றும் மறக்கின்றான். இந்த நிலையில் பெற்றாரும் உற்றாரும், உதவி செய்கின்றவர் போன்று, தாமும் ஊழின் பயன்களாயிருந்து ஊழை ஊட்டுகின்றார்கள். உண்ணத் தொடங்கி விடுகின்றான். இங்ஙனம் ஊழையுண்டு, ஊழலால் வளர்கின்றான்.

இவ்வமயம் பெற்றாரும், பெண்டு பிள்ளைகளாகிய உற்றாரும், இவனைச் சூழ்ந்து கொள்ளுகின்றனர். இவனைத் தன்னலங் கருத விடாமல் காவல் புரிகின்றனர். அறிவுடையோரிடம் பேசக்கண்டால், அலறிப் புடைத்துக் கொள்கின்றார்கள். கடவுளை நினைந்து கை குவித்து நின்றால், தட தட வெனப் பேசுகின்றார்கள். மட மட வென்று ஓசை கிளம்ப நடக்கின்றார்கள். கண்மூடி ஒரு கணம் இருந்துவிட்டால், பாழ்த்த கன்மப் பயன் வடிவான இவர்கள் மருளாடியிடம் மண்டியிட்டு, உடுக்கை யடிப்பித்துக், குறி கேட்கத் தொடங்கிவிடுகின்றார்கள். துறவிகளைக்கண்டு தொழுகவோ? அல்லது அவர்கள் சொல்கின்ற தூயமொழிகளைக் கேட்கவோ கண்டுவிட்டால், உடனே ஜோசியம் பார்த்துக் கழிப்புக் கழிக்கின்றார்கள். இவை யொன்றையுங் கேளாமல் தொடர்ந்து உயர் வழியில் ஒருவாறு நடப்பானே யானால், கோபப் பட்டவர் போன்று, கோணிச் சிணுங்கி,

மூலையில் ஒதுங்கி, முகங் கவிழ இருந்து, கண்ணீர் உகுத்துக், கதறத் தொடங்குகின்றார்கள். என்ன வெனக்கேட்டால், என் பெயருக்கு அதனை யெழுதிவை, இதனையெழுதியவை, பண்டில் உள்ள பணத்திற்கு என் பேரால் பாஸ்புக்கு வாங்கு, என்று இன்னும் பல இன்னல்களை யே, பலன்களாகக் கொடுத்துக் கொண்டிருக்கும்; புறப்பற்றாகிய இவரையோ? இதனையோ? துறந்தால் அல்லது, இடையூறின்றிய மெய்யுணர்வு உண்டாகாது என்பதனை, உந்தியார் உரைக்கின்றது காண்பாம்.

(கசூ) அ — உந்தியார் :—

வேண்டா துறத்தலே மெய்யுணர்வு என்பதொன்று
ஈண்டிடை யூறதற்று உந்தீ பற
எய்துமேல் இல்லையென்று உந்தீபற

பொழிப்பு :—

மெய்யுணர்வு என்பது ஒன்று, இடையூறது அற்று, ஈண்டு எய்து மேல், துறத்தலே வேண்டாம் (அதுவே) இல்லை என்று உந்தி பற உந்திபற.

பொருள் :—

'மெய்யுணர்வு என்பது'—(உரையிறந்து ஓங்குவதும், உலக உணர்விற்கு எட்டாததும் என, ஞானிகளாகிய பெரியோர்களால் புகழப் படுவதாகிய) உண்மை உணர்வு என்பது, 'ஒன்று'—ஒப்பற்ற தனித்த நிலை, 'இடையூறது அற்று'—(மனம் முதலிய உட்கருவி களாலும், காது முதலிய புறப் பொறிகளாலும், ஓசை முதலிய புலன் களாலும், எவ்வகை யான) தடைகளும் இன்றி, 'ஈண்டு'—இந்த இல்வாழ்க்கையில், 'எய்துமேல்'—அடையப் படுமே ஆனல் 'துறத் தலே'—(மண், பெண், பொன், முதலிய புறப்பற்றுகளை) கூடாதென விட்டொழித்தலே, 'வேண்டாம்'—வேண்டுவதில்லை, 'இல்லை'—இந்த மெய்ந் நிலையில், அப்படித் துறப்பதற்கு உரிய ஒன்று) இல்லை 'என்று'-என்று பாடிக் கொண்டு, உந்திப் பறவுங்கள், சிறுமியர்காள்! உந்திப் பறவுங்கள்.

ஒருவன் தன்னைத் தானுகவே அறிதலாகிய மெய்யுணர்வாய், தடையாது மின்றி நிற்பானுகில், அவனல் துறப்பதற்கான பொருள் யாதொன்றுமில்லை ஆவனுகவே இருக்கின்றுன் என்பது தெளிவு.

(தொடரும்)

# பிறவியைப் பழித்தல்.

தவத்திரு. சுவாமி அருணகிரிநாதரவர்கள்,
நாராயணதேசிகர் நிலையம், சென்னை.

முன் (ம 2 இ 1 ப 8) தொடர்ச்சி

மாணவன்— கருணைவடிவான குருநாதா? யான்இந்தவுலகந் தோன்றிய இதுகாறும் எடுத்த பிறவிகளால் ஏதோ! பிறர் எனது செயலால் துன்பம் அடைந்தாலும் யான் சுகமாக இருக்கவில்லையா?

குரு:— ஏ, மாணவனே! நீதான் என்ன சுகமடைந்தனை? நீ! உன் தாயின் கருவில் உருவாய்த் தங்கிய நாள்முதல் முந்நூறு நாள்வரையில் கருப்பா சயத்துக்குள்ளே கட்டுண்டு நீபட்ட துன்பங்களும், பின் பிறந்து வளர்ந்து பெரியமனிதனாகி இறந்துபோம்வரை நீபட்டதுன்பங்களையும், ஒருவாறு நினக்கு நினைப்பூட்டும் பொருட்டு எடுத்துறைக்கின்றேன் நின்மனதை ஒருமுகப்படுத்தி அமைதியோடிருந்து கேட்பாயாக.

நீ! முற்பிறப்புகளில் செய்த வினைக்கீடாக இறந்து எமலோகம் சென்று அங்கு எமதருமராசன் விசாரணைசெய்து செய்த தீர்ப்புப்படி அங்கு அமைக்கப்பட்டுள்ள நரகங்கள் என்று சொல்லப்படுகின்ற சிறைகளில் அடைக்கப்பட்டு குறித்தகாலவரையரைவரை நரகதுன்பங்களை அனுபவிக்கும்படிசெய்து முடிந்ததும் இவ்வுலகிற் பிறந்து இன்ப துன்பங்களைத் துய்த்து நல்வழியடைய எமலோகத்திலிருந்து பூலோகத்திற்கு எமதூதர்கள் உன்னை குப்புறத் தள்ளுகின்றார்கள். அப்போது நீ அதோகதியாய் (கீழே) வருகின்றாய். அப்படிவரும் வேகத்தால் உனது சூக்கும உடலைத்தாங்கியிருந்த யாதனா சரீரம் (உடம்பு) சிதைந்து விடுகின்றது. அப்பொது, நீ ஜீவ அணுவடிவமாக மேகமண்டலத்தை வந்தடைகின்றாய். மேகங்கள் குளிர்ச்சியடைந்து மழையாகப்பெய்யும்போது அந்த மழைத்தாரை வழியாக பூமியை வந்தடைந்து உணவுப்பொருள்களில் அமைந்தாய். அவ்வுணவு உண்ட மனிதன் உடம்பினுள் சென்று முறையே தாதுக்களில் மாறுதல் அடைந்து முடிவில் அம்மனிதனின் விந்துப் (சுக்கில) பையாகிய கருவறையை வந்தடைந்தாய், அதனுள் இரண்டு மாதம்வரை கருவாய் இருந்தனை.

அதன்பின் பெண்ணின் கருவில் வந்தமைவதற்காக நீ கருவாயிருக்கும் மனிதனின் மனத்தில் காமக்கிளர்ச்சியைத் தோற்றுவித்து அவன் ஒரு பெண்ணின்பால் சிற்றின்ப நிகழ்ச்சியைச் செய்யும்படி செய்து அந்நிகழ்ச்சியின்மூலம் அம்மனிதனின் கருவாகிய விந்துப் பையுளிருந்த நீ வெளிப்பட்டு அப்பெண்ணின் கருப்பாசயத்தை வந்தடைந்தனை.

அறுகம்புல்லின் நுனியில் தொங்கும் சிறிய பனித்துளியின் அளவான விந்துவில் அமைந்து கருப்பாசயத்துள்ளிருக்கும் நின்னை இறைவனின் அருட்சத்தியானது உருவாக்குகின்றது. ஒன்பது மாதத்தில் நீ! ஒருமுழக்குழவியாகின்றாய் நீ அடங்கியிருக்கும் கருப்பையானது ஒரு துளி விந்துவுக்கு இடமாயிருந்தது ஒரு சாண் நீளம் விரிந்து இடங்கொடுக்கின்றது. அந்த ஒரு சாண் பையினுள் ஒரு முழ நீளக்குழவியாகிய நீ. கால்களையும் கைகளையும் முடக்கி ஒடுக்கிக் கட்டுண்டு கிடக்கின்றாய். அக்கருப்பையுள்ளிருக்கும் காலத்தில் ஐந்து பெருந்துன்பங்களால் மிகவும் வருந்துகின்றாய், அவ்வைம் பெருந்துன்பங்களாவன:—கருப்பாசயப்பை உறுத்துதல், அதனுள் கருநீர் சுரந்து நிறைந்து பிண்டத்தை மூடுதல், அதனை உதராக்கினி (தகித்தல்) சுடுதல். பிரசூதவாயு புரட்டித்தள்ளல். யோனிவாயில் நெருக்குண்டல் என்பவைகளாம். இந்த ஐந்து வகையான துன்பங்கள் கருவினுள்ளிருக்கும் சிசுவாகிய நின்னை எவ்வாறு வருத்தியது என்பதை உவமான வாயிலாகச்சிறிது எடுத்துக்காட்டுதும் உற்றுக்கேள்.

ஆறடி உயரமுள்ள ஒருமனிதனை ஒரு கோணிப்பையினுட் போட்டு இருக்கிக்கட்டி ஒரு கொப்பரையில் போட்டு அது நிறைய நீரை நிறப்பி அடுப்பிலேற்றி நெருப்பிட்டு கொதிக்க வைத்தால் அவனுக்கு எத்தகைய துன்பம் இருக்குமோ! அதனைப்போல் கருப்பாசயமாகிய கோணிப்பையினுள் கட்டுப்பட்டு பனிக்குட நீரால் மூடப்பட்டு உதராக்கினியால் தகிக்கப்பட்டு நீபட்ட வேதனையை யாரே எடுத்து விளக்கவல்லார்.

இது நிற்க. நீ தாயின் வயிற்றினுள் முன்னூறு நாட்களைக் கழித்து பிறக்கும்பொழுது மேல்நோக்கிய சிசுவாகிய நின்னை கீழ்நோக்கி யோனிவாயிலுக்கு திரும்பி வரவேண்டியதற்காக பிரசூதவாயுவானது புரட்டித் தள்ளுகின்றது, அப்பொழுது நாம் மேற்கூறியபடி கோணிப்பையுட் கட்டுண்டு கிடக்கும் மனிதனை மலையின் உச்சியிலிருந்து உருட்டிவிட்டு தரையில் வந்து விழச்செய்தால் அவன் எத்தகைய துன்பத்தை அடைவானோ! அத்தகைய துன்பத்தை நீ அடைந்தாய்.

பின்பு தாயின் யோனித் துவாரத்தையடைந்து அச்சிறு துவாரத்துள் நின் தலைபுகுந்து வெளியில் வரும்படி பிரசூதவாயு உள் நின்று உதைத்துத் தள்ள நீ வெளிவரும்போது சாறுபிழிய கரும்பாலையில் கொடுத்து வெளிவரும் சக்கைபோல் நெருக்குண்டு கசங்கி மூச்சுப்பேச்சின்றி வெளியில் வந்து மூர்ச்சையாகிக் கிடந்தனை. அப்போது அருகிலிருந்த மருத்துவச்சி செய்யும் செயல்களால் மூர்ச்சை தெளிந்து அழத்தொடங்கினை.

அதன்பின் பசியெடுத்தாலும் ஈக்கடித்தாலும் எறும்பு கடித்தாலும் வயிறு நொந்தாலும் சொல்லத் தெரியாமலும் போக்கத் தெரியாமலும் அழுதுகொண்டே இருந்தனை, தனது மலமூத்திரங்களை தன் படுக்கையிலே கழித்து அதிலேயே புறண்டு பூசிக்கொண்டு கிடந்தனே. அன்னையறிந்து அகற்றினாலன்றி நீயே தெரிந்து நீக்க-முடியாதழுதனை.

வானம் பார்த்து மல்லாந்தபடியே மூன்று மாதம் கிடந்து குப்புறக்கவிழ முயற்சித்துக் குட்டிக்கரணம்போட்டு புறண்டு கவிழ்ந்து மூக்கும் முகமும் தலையில் மோதி திணரி அழுது திக்குமுக்காடி கைகளையூன்றி தலையை நிமிர்க்கப் படாதபாடு பட்டாய். அதன்பின் நெஞ்சால் நகர்ந்து தத்தித் தவழ்ந்தும் எழுந்தும் விழுந்தும் இடர் பட்டு நடக்கக் கற்றுக்கொண்டாய்.

குழவிப்பருவத்தில் நீ குடித்த மருந்துகட்குக் கணக்கேயில்லை. ஐந்து அகவை தொடங்கியதும் அடங்காப்பிடாரியாய் நீ செய்யுந் துட்டச்செயலாலும் துடுக்குத்தனத்தாலும் மற்றய குழந்தைகளோடு சண்டையிட்டு அடிபட்டாய் அதைக்கண்ட நின் அன்னையும் தந்தையும் அண்ணனும் அக்காளும் நையப்புடைத்தார்கள். அதன் பின் நின் துடுக்கை அடக்கப் பள்ளியிற் சேர்த்தார்கள். அங்கும் நீ அடங்கி நடக்காததால் உபாத்தியாயரிடத்தும் சட்டாம்பிள்ளை-யிடத்தும் மிகமிக உதைபட்டாய். நன்றாய்ப் படித்து புலமையடையும் முன்னரே பாவையர் மோகத்தால் பள்ளியை விட்டாய். பெண்களைக் கண்டு பீடிழந்து சென்றாய். கிள்ளை மொழியில் உள்ளம் பரிகொடுத்தாய். வீட்டில் உள்ள பொருளெல்லாம் மெல்லியற்கிழந்தாய். உள்ள பொருளெல்லாம் உரிஞ்சி விட்டுனக்குக் கொள்ளைநோய் பலவும் கொடுக்க வாங்கினை. எள்ளி நகையாடி எடா! போவெனச் சொல்லெனுங் கொள்ளியாற் சுட்டு விரட்டினர். அந்நிலையிலும் விலைமகள் மோகம் நினக்கு விட்டபாடில்லை. கையிலே காசில்லை உனது மெய்யிலே வந்த வெட்டையும் கிரந்தியும் ஒழியவில்லை.

இந்நிலையிலிருக்கும் நின்னைப் பார்த்து அன்னையும் தந்தையும் கண்ணீர் வடித்து ஐயோ! மகனே இப்படி யாயினையே! யென்று பிரிந்து வருந்தி மருத்துவரை அழைத்துவந்து மருந்துகொடுத்து அருந்தல் பொருந்தல் அனைத்தையும் நீக்கி உப்பிலாப் பத்தியம் வைத்து அன்னமும் தண்ணீரும் அருந்தச்செய்தனர். பலநாள் அப்படிப் பத்தியங்காத்து பறத்தையார்பால் வாங்கிய பாழ்நோய் ஒழித்தாய். பட்டதுபோதும் இனிமேல் பறத்தையர் முகத்தைப் பார்க்கவே மாட்டேனென்றாய். பின் அன்னை அளித்த அறுசுவை உணவால் உடலிற்கொஞ்சம் பலமும் மினுமினுப்பும் உண்டானதும். பழயபடியே பறத்தையரை நாடினாய். அவளை இச்சித்த பலரிடம் பகையேற்பட்டன, அதனால் அச்சம் ஏற்பட்டது. பழியேற்பட்டது

அதைக்கண்ட அன்னை தந்தையர் ஐயோ! இந்தப் பாவிக்கு ஒரு திருமணமாவது செய்தொழிப்போம் என்றெண்ணி நல்ல பருவமங்கையைத் திருமணஞ்செய்து வைத்தனர். அதனால் நீ ஒரு பொல்லாக் குடும்பியாய் புலம்பித்தவிக்கலானாய். மனைவியின்பாற் பல மக்களை பெற்றாய். தொல்லைக் குடும்பத்துயரத்தில் ஆழ்ந்தாய். கவலையும் நோய்களும் கடித்துத்தின்றன. வறுமையும் மூப்பும் வளைத்தன. முதுகினை. நரையுந்திரையும் நலிந்திடச் செய்தன. காச இருமலால் கக்கினாய் கோழையை. மேல் மூச்சு வாங்க விம்மியழுதனை. கருவிலுருவாகிப் பிறந்தநாள் முதல் அடைந்த இத்தகைய பெருந்துன்பங்களைத் தவிர பெற்ற சுகம் யாதெனச் சற்றுச் சிந்தித்துப்பார். கருவில் உருவாகியது முதல் இதுகாறும் நீ பட்ட துன்பங்களை ஒருவாறு நினைப்பூட்டினோம். இனிமேல் வரும் இறப்புத் துன்பங்கள் இதைவிட எண்மடங்கு அதிகமெனக் கூறப்படுகின்றதே. அத்துன்பங்களைப் போக்க என்ன செய்யப்போகின்றாய், ஏ அறிவிலாதவனே இவைகளையெல்லாம் ஆராய்ச்சி செய்து பாராமல் இப்பிறவியே விரும்புகின்றாயே இதனால் யாது பயன் சிந்தித்துப்பார்.

## மேற்கோள்.

கருவளர் பைசாண் முழநீ அதிற்கட் டுண்டு வருந்தினைமுன்
கழிபொருள் ஒக்க நெருக்குண் டுடல்வெளி காண அயர்ந்தனைபின்
தருசிறு நீர்மல மாதிபு ரண்டு தவழ்ந்து நடந்திடுநாள்
தரைமிசை வீழ்ந்தறை யுண்டைம் பருவந் தனிலனை தந்தைமுனால்
குருவிவர் முனிவுக் கிடனாய் நொந்தனை கொம்பனை யார்மயலாற்
கூடழி நோய்பழி பகையச் சங்கொடு கோர குடும்பியுமாய்
பெருதுயர் கண்டனை ஐம்பொறி கெடுமூப் பினின்மர ணத்துயரென்
பேசுக அறிவாய் பேதாய் பயனெது பிறவி விரும்புவயே.

(தொடரும்)

## குறிப்பு.

"துறவி" என்னும் திங்களிதழில் வெளியிட கட்டுரை எழுதியனுப்பும் துறவிகள் நல்ல கடிதத்தில் தொடர்பு எழுத்தில்லாமல் எழுத்துக்களை நன்கு தெரிந்து கொள்ளும்படி தனித்தனியாக ஒவ்வொரு கடிதத்திலும் ஒரேபக்கத்தில் எழுதி ஒவ்வொரு தமிழ் மாதம் 15உக்குள் அனுப்பிவைக்கும்படி வேண்டுகின்றோம்.

# யோக சிகோப நிஷத் — தமிழ் மொழிப்புரை.

**தவத்திரு. திரிமூர்த்தி சுவாமிகள்**
சாது சுவாமிகள் ஆஸ்ரமம், பழநி.

முன் (ம 2 இ 1 ப 24) தொடர்ச்சி.

**(அ...கை) குண்டலிசக்தியை விழிப்புறச் செய்யுமுபாயங் கூறல் :—**

நன்றாய்ச் செமிக்கும்படியாக அற்பாகாரம் புசித்து, சுகமாய்த் தூங்கி எழுந்தவுடன் முதலில் நீரால் உடலை நன்கு சுத்தி செய்ய வேண்டியது. இது புறத்தூய்மை எனப்படுகிறது. பிறகு சுகாசனத்தில் உட்காரவேண்டியது. அதன் பின்னர் மனதைப் பொறிவழி போகாது தடுத்து ஒருமைப்படுத்திக்கொண்டு பூரக, கும்பக, ரேசகங்களால் பிராணனது வழியைச் சுத்தி செய்வானாக. இதுவே அகத் தூய்மை எனப்படுகிறது, பிறகு மூலபந்தமென்ற பயிற்சியால் மூலத்தை மேலுதையும் படிச்செய்து குண்டலி சக்தியை எழுப்ப வேண்டும் என்று அறிக. (37)

**(அ....கை) கேசரி முத்திரையின் பயிற்சியும் அதன் பயனுங் கூறல் :—**

ஆண்குறிக்கும் தொப்புழுக்கும் நடுவிலுள்ள வயிற்றை மேல்ஏறச்செய்வது உட்டியாணமென்ற பயிற்சியாகும். இந்த உட்டியாணப் பயிற்சியாலேயே குண்டலி சக்தியானவள் புருவங்கட்கு நடுவிலுள்ள உட்டியாண பீடத்தை நோக்கி எழுந்து செல்லுகின்றாள். கழுத்தைச் சிறிது மார்பில் வளைத்து நிற்பது ஜாலந்தரப் பயிற்சி என்று அறிக. பல்வேறு சிந்தனைகளை அகற்றி உறுதியான மனமுள்ளவனாய்க் கேசரி முத்திரையைப் பயில வேண்டும். அதாவது-நாவை உள்ளே மடக்கி அண்ணாக்கடியிலுள்ள பொந்தில் நுழையச் செய்து புருவங்களின் நடுவிற் பார்வையைச் செலுத்தி நிற்பது கேசரி முத்திரையின் பயிற்சியென்று அறிக. எவன் இந்தக்கேசரி முத்திரையால் அண்ணாக்கினடியிலுள்ள துவாரத்தை அடைத்து விடுகின்றானோ, அவனுக்கு அமுதவடிவ வீர்யமானது யோனிவடிவ அக்கினியில் வீழ்வதில்லை. பிராணாபானன்களாகிய காற்றும் அலையாது நிலைபெறுகின்றது. மற்றும் அவனுக்குப் பசியுண்டாவதில்லை· தாகமுண்டாவதில்லை. தூக்கமுண்டாவதில்லை. சோம்பலுண்டாவதில்லை. மற்றும் அவன் மறிப்பதே இல்லை என்று அறிக. இக்கேசரி முத்திரையை ஆசாரியனிடத்துக்கேட்டு அதன்படி நன்றாய்ப் பயின்று அதனுண்மையைத் தெரிந்தவனுக்கே இவ்வித பயன் கைகூடுமென்று அறிக. (42)

**(அ...கை) தலையுச்சியிலுள்ள ஆயிரமிதழ்க் கமலத்தில் இடையறாது சிவத்தியானஞ் செய்வதால் முக்தியுளதாமெனக் கூறல் :—**

கேசரி முத்திரையைப் பயின்ற பின்னர் கீழ்மேல் நிறைந்ததாய், சித்வெளியாய் புருவத்திற்கு மேல் பன்னிரண்டங்குலங் கடந்ததாய், அழிவற்றதாய், குறியற்றதாய், பற்றுக்கோடின்றியதாய் இன்ப துன்பங்களைக் கடந்ததாயுள்ள சிவத்தை இடையறாது தியானஞ் செய்வாயாக யாவற்றினுஞ் சிறந்த அப்பரசிவமானது அறியப்பட்டபொழுது யான் எனது என்ற அகந்தை வடிவமுடி அவிந்து போகின்றது. ஐயப்பாடுகள் யாவும் அழிவுறுகின்றன. ஊழ் வினைகள் யாவும் கெட்டொழிகின்றன. இதுவே பரமுக்தி நிலை என்று அறிக (45)

**(அ....கை) மேற்சொல்லும் ஒவ்வொரு பாவனைக்கும் உளவாகும் சித்திகளைக் கூறல்:—**

தேவர்கள் தலைவ! புலன்களை வென்றவர்களும், பிராணனோடு மனதையுந்தன் வயப்படுத்தியவர்களுமான சாந்தமே வடிவுகொண்ட மகான்களுக்கு எளிதில் அடையப் பெறுகின்ற சித்தியைக் கூறுகின்றேன். ஒருமனதாய் விழைவுடன் கேட்பாயாக. நாதத்தில் மனதை ஒடுக்கியவனுக்கு சேய்மையில் உளதாகுஞ் சொற்களைக்கேட்குமாற்றல் உண்டாகின்றது. புருவ நடுவிலுள்ள பிந்துவில் மனதை ஒடுக்கியவன் சேய்மையிலுள்ள பொருள்களைக் காணுந்திறமை பெறுகின்றான். காலத்தில் மனதை ஒடுக்கி நின்றவனுக்கு முக்காலங்களின் அறிவு உண்டாகின்றது. வேறு உடலில் மனதைச் செலுத்துமாற்றல் பெற்றவன் வேறுடலில்-நுழைந்து நிற்குமாற்றல் பெறுகின்றான். தலையுச்சியில் அமுதத்தியானஞ் செய்து கற்றவனுக்கு பசி, தாகம், விஷமிவற்றை அடக்கியாளுந்திறமை உண்டாகின்றது. பூமியில் சித்தத்தை நிருத்தப் பயின்றவன் பாதாளவுலகிற்குச்செல்லும் வலிமை பெறுகிறான். நீரில் மனதை நிறுத்தப் பழகியவன் நீரால் அழிக்கப் படாதவனாய் விரும்பிய வண்ணம் நீரிற் செல்லுகிறான். நெருப்பில் மனதை நிறுத்தப் பயின்றவன் நெருப்பால் எரிக்கப்படுவதில்லை. காற்றில் மனதை நிறுத்தப்பயின்றவன் ஆகாயத்திற் செல்லும் ஆற்றல் பெறுகின்றான் ஆகாயத்தில் மனதை நிறுத்தப் பயின்றவன் அணிமாதி சித்திகளைப் பெறுகிறான். விராட் வடிவில் மனதை நிறுத்தப் பயின்றவன் மிகுந்த பெருமையை அடைகின்றான். நான்முகனிடத்தில் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகைப் படைக்குமாற்றல் பெறுகின்றான. இந்திரனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் மனிதர்களுக்குத் தலைவனாகின்றான். விஷ்ணுவினிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகைக் காக்கும் வலிமை பெறுகின்றான். உருத்திரனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன் உலகை அழிக்கும் வலிமை பெறுகின்றான். மகேசனிடம் மனதை நிறுத்தப் பயின்றவன்

எல்லாமாய் நிற்கும் ஆற்றலைப் பெறுகின்றான். சதாசிவத்தில் மனதை நிறுத்தப் பயின்றவன் எல்லாச் சித்திகளையும்பெற்று இன்பவடிவம் ஆகின்றான். புலன்களை வென்ற யோகி எந்தெந்தச் சித்தியை அடைய விரும்புகின்றானோ, அந்தந்தச்சித்தி அவனுக்கு எளிதிற் கை கூடுகின்றது. "எத்பாவம் தத்பவதி" என்றபடி பாவனையே சித்திகளின காரணமென்று அறிக. (55)

**(அ... கை) மேற்சொன்ன சித்திக்கும் முத்திக்கும், சிறந்த காரணமாயுள்ளவர், குருவாம். ஆகையால் குருவை முறைப்படி பூஜிக்க வேண்டுமெனக் கூறல் :—**

நான்முகனே! குருவே பிரம்மாவென்றும், குருவே விஷ்ணுவென்றும், குருவே சதாசிவனென்றும் அறிக குருவுக்கு மேம்பட்டவர் மூன்று உலகத்திலும் இல்லை. சிவபெருமானே குரு வடிவு கொண்டு வருகின்றார் அவரே நமக்கு மேலான ஞானத்தை உணர்த்துகின்றார் என்று எண்ணி அவரைச் சிறந்த பக்தியோடு பூஜிப்பாயாக. குருவே சிவன், சிவனே குரு, என நிச்சயித்து குரு சிவன் இவர்களுக்கு வேற்றுமை பாராட்டாமல் மிகவும் போற்றுவாயாக. ஓரிடத்துங் குருவோடு தனக்கு அபேதமிருப்பதாக வாக்கால் கூறாது இருப்பாயாக. குருவுக்குந், தெய்வத்திற்குந் தனக்கும் மனதால் அன்போடு அபேதமே பாவனை செய்யத்தக்கது. (59)

**(அ...கை) யோகசித்தியின் பெருமையைக் கூறல் :—**

யாதொரு அறிஞன் மிகரகஸ்யமான யோகங்களின் முடிவைக் கூறும் யோக சிகோப நிஷத்தை நன்கு கற்று அதன்படி பயின்று அறிவனோ, அவனுக்கு மூவுலகிலும் அடையப்படாதது சிறிதுமே இல்லை என்று அறிக. மற்றும் அவனுக்கு புண்ணிய பாபங்களின் தொடர்பு இல்லை. அவன் மீண்டும் இவ்வுலக வாழ்வில் திரும்புவதில்லை என்று அறிக (61)

**(அ ...கை) சித்திகளை விரும்பாதிருக்க வேண்டுமெனக் கூறல்.**

முக்தி வேட்கையுள்ளவன் சித்தியை விரும்பலாகாது. அது சித்த சலனத்தை உண்டுபண்ணுங் காரணம் என்று அறிவானாக. தத்துவத்தை அறிந்த ஞானி சித்தியை விரும்பினும் அவன் முக்தனென்றே அறிக. ஐயுறற்க. (62)

ஓம் தத் ஸத்,

**ஐந்தாவது அத்தியாயம் முடிந்தது.**

## ஆறுவது அத்தியாயம்.

**(அ....கை) குண்டலி சக்தியை உபாசிக்கும் முறையைக் கூறல்.**

சிவபெருமானே! யாதொன்றை உபாசிப்பதால் பிறவித் தொடரிலிருந்து விடுபட்டவன் ஆவனோ, அந்த உபாசன முறையைத் தாங்கள் எனக்குக் கூறியருள்வீராக. பிரம்மாவே! மிக ரகசியமானதும் வேதங்களின் சாரமாயுள்ளதுமான உபாசனையின் வழியை உன் பொருட்டுக் கூறுகின்றேன். சிரத்தையோடு கேட்டு நன்கு உபாசிப்பாயாக. குண்டலினியாய்ச் சுழுமுனையாய்ச் சந்திரமண்டல மத்தியிலிருப்பதாய், அமுத வடிவாய், மனோன்மணியாய், சிதான்மாவாய், மகாசக்தியாயுள்ள உன்பொருட்டு வணங்குகின்றேன். என்று தியானிப்பாயாக. வேறு உபநிடதத்தில் கூறியுள்ள குண்டலி சக்தியின் தியானம்:—மூலாதாரத்திலிருந்து பிரம்ம ரந்திர பரியந்தமும், பிரம்ம ரந்திரத்திலிருந்து மூலாதார பரியந்தமும், தொடர்ந்து நிற்பதாய்த் தாமரைத் தண்டின் நூல்போன்று அதிசூக்குமமாயுள்ள சுழுமுனை நாடியை, மூலாதாரத்தில் மின்னற் கூட்டங்களின் ஒளியுள்ளதெனவும், இதயத்தில் பத்தாயிரம் சூரியர்களின் ஒளியுள்ள தெனவும், புருவ நடுவில் கிரணங்களாற் சூழப்பெற்ற லக்ஷம் சந்திரர்களின் ஒளியுள்ளதெனவும் தலையுச்சியில் பேரொளி வடிவ பராசக்தியாகவும், தியானஞ்செய்பத்தக்கது. குண்டலியை முதலில் இங்ஙனம் தியானிப்பது உபாசனமுறை என்று அறிக. (3)

**(அ....கை) சுழுமுனை நாடியின் இலக்கணங் கூறல்.**

பிரம்மாவே! இதயத்தில் நூற்றொரு நாடிகள் உள்ளன. அவற்றுள் ஒரு நாடி தலையுச்சியைப் பற்றி நிற்கின்றது. அதுவே சுழுமுனைநாடி எனப்படுகிறது. அதைப்பற்றி மேலே செல்லுகின்றவன் மரணமிலாப் பெருவாழ்வு பெறுகின்றான். மற்றைய நூறுநாடிகளைப் பின்பற்றிச் செல்லுகின்றவன் மரித்துப் பிறக்கின்றான். அந்தச் சுழுமுனை நாடியே பரத்தில் ஒடுங்கியதாய், மலத்தின் நீங்கியதாய், பிரம்ம வடிவாய் விளங்குகின்றது. அதன் இடது பக்கத்தில் இடைநாடி உளது. வலது பக்கத்தில் பிங்கலைநாடி உளது. அந்த இடை-பிங்கலைகளின் நடுவில் பரதத்துவமாய் நின்ற சுழுமுனை நாடியை எவன் அறிகின்றானோ, அவனே வேதத்தினுண்மையைக் கண்ட ஜீவன்முக்தனென்று அறிக. இருமூக்கினுட் செல்லுகின்ற பிராணனை அந்நடுநாடியில் நன்கு தடுத்து நிறுத்துவாயாக அந்நாடியில் பிராணன் நீடித்து நிலைபெறுதலை அனுபவித்த பின்னர்மெதுவாகவே வெளியில்விடப் பயில்வாயாக. உடலினது பின்புறத்தில் வீணைதண்டத்தைப் போன்று ஒரெலும்பு உளது. அதுவே உடலைத்தாங்கி நிற்பதாகும். அந்நீண்ட எலும்பானது உடலை அளந்து நிற்கின்றது. அவ்வெலும்-

பையே பிரம்ம தண்டமென்று சொல்லப்படுகிறது. அதனுள்ளில் அதிசூக்ஷுமமான துவாரமுள்ள சுழுமுனை நாடி உளது. அச்சுழுமுனை நாடியே அறிஞர்களால் பிரம்மநாடி எனக்கூறப்படுகின்றது. அந்தப் பிரம்ம நாடியே இடை பிங்கலைகளின் மத்தியில் சூரிய வடிவாயுள்ள சுழுமுனை நாடி என்று அறிக, (9)

**(அ...கை) எல்லாவற்றையுந் தாங்கி நிற்பது சுழுமுனை நாடி எனக்கூறல்**

அச்சுழுமுனையில் எல்லாம் நிலைபெற்று விளங்குகின்றன: அதுவே எல்லாவற்றிலும் சென்றிருப்பதாய், எங்கும் முகமுள்ளதாக இருக்கின்றது. அதனுள்ளில் சூரியன், சந்திரன், அக்கினி, பரசிவன், பஞ்சபூதவடிவ உலகங்கள், திக்குகள், ஆலயங்கள், கடல்கள், மலைகள், கற்கள், தீவுகள், நதிகள், வேதங்கள், சாஸ்திரங்கள், ஞானங்கள். அறுபத்து நான்கு கலைகள், எழுத்துக்கள், ஏழுஸ்வரங்கள், மந்திரங்கள், புராணங்கள், மூன்று குணங்கள், பிராணவாயுக்கள், ஆன்மாக்கள், இவைகள் யாவும் நிலைபெற்றுள்ளன. அவைகளைத் தோற்றுவிக்குங் காரணமானதுந், தோன்றுமிடமாயுள்ள பீஜமாயிருப்பதும், அதுவே என்று அறியவும். ஆகையால் சுழுமுனையினுள் உலகமும், உலகிலுள்ள யாவும் நிலைபெற்றுள்ளன. எல்லாச் சீவான்மாக்களின் உள்ளிருப்பதாய்ப் பல்வேறு நாடிகளைத் தோற்றுவிக்கின்றது. மேல்நோக்கிய வேரையும் கீழ்நோக்கிய கிளைகளையுமுடையதாய் எங்கும் பரந்து நின்று வாயுக்கள் செல்லும் வழியாக உளது. அங்ஙனம் வாயுக்கள்செல்லும்வழிகள்எழுபத்திராயிரம் நாடிகள் எனஎண்ணிக்கையிடப்பட்டுள்ளன. அந்நாடிகள் எங்கும் பரந்திருப்பதாயினும், குறுக்காகவும் சில நாடிகள் செல்லுகின்றன என்று அறிக. இந்நாடிகள் யாவற்றையும் தொடர்ந்து நிற்பது குண்டலி சக்தியாகும். அச்சக்தியின் மேலுங்கீழுமுள்ள துவாரங்கள் யாவற்றையும் யோகப்பயிற்சியால் அடைப்பதால் ஜீவன் மேல்நோக்கிச் செல்லும் ஆற்றலைப் பெறுகின்றான். அங்ஙனம் செல்லுவதால் ஜீவன் முக்தி அடைகின்றான். (15)

**(அ...கை) குண்டலி சக்தியை விழிப்புறச் செய்யுமுபாயங் கூறல் :—**

மேற்சொன்னபடி குண்டலி சக்தியின் இலக்கணத்தை நன்றாய்ச் சிந்தித்துப் பின்னர் மூக்கின் இரு துவாரங்களையும் அடைத்துப் பிடித்துக்கொண்டு மூலபந்தமென்ற பயிற்சியால் குதத்தை மேலேறும்படிச் செய்யவும். இப்படிச் செய்வதால் குண்டலி சக்தியானவள் தான் செல்லும் வழிநடுவிலுள்ள பிரம்மகிரந்தி, விஷ்ணு கிரந்தி, உருத்திர கிரந்தி,என்ற முடிச்சுக்களை அறுத்து மேலே புருவங்களின் நடுவிலுள்ள பிந்துத்தானத்தை அடைகின்றாள். இதுவே பிராணாயாமப் பயிற்சியால் குண்டலி சக்தியை எழுப்பும் உபாயமென்று அறிக. (தொடரும்)

செய்திக்குறிப்பு.

காஞ்சிபுரம் தவத்திரு. கோவிந்தானந்த சுவாமிகள்

## 25-ம் ஆண்டு குருபூஜை வெள்ளிவிழா.

இவ்வெள்ளிவிழா மன்மத ஆண்டு தைத்திங்கள் (21, 22, 23) (3, 4, 5—2—56) வெள்ளி, சனி, ஞாயிறு மூன்று நாட்களும் சென்னை தமிழாராய்ச்சித் துறைத்தலைவர். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையிலும், திருப்பராய்த்துறை, தவத்திரு சித்பவானந்த சுவாமிகள் தலைமையிலும், சங்கேந்தி தவத்திரு குக சதாசிவ அடிகள் தலைமையிலும் மிகச்சிறப்பாக நடைபெற்றது. டாக்டர் உயர்திரு. வ. ஆ. தேவசேனபதி அவர்கள், சென்னை. கல்கிஆசிரியர் M.P. சோம சுந்தரம் அவர்கள், சென்னை. ச. சிவகுமாரன், M A. அவர்கள், கோவை உயர்திரு. N கிரிதாரிபிரசாத் அவர்கள் B. A. B. L. முதலியவர்கள் மிக அழகாகத் திறம்படப் பேசினர்கள். இறவு மூன்று நாட்களும் திருமதி M. L. வசந்தகுமாரிஅவர்கள், கும்பகோணம், திருமதி. K. S. தனம்மாள் அவாகள், சங்கீத கலாநிதி, சங்கீத ரத்னகர, காயகசிகாமணி, அரியக்குடி உயர்திரு. இராமானுஜ ஐயங்கார் அவர்கள், மதுரை உயர்திரு. சங்கீத வித்வான் S. சோமசுந்தரம் அவர்கள் இன்னிசை பாடி மகிழ்வித்தார்கள். இம்மூன்று நாட்களும் ஐயாயிரத்துக்கு மேற் பட்ட மக்கள் குழுமிக் குதூகலத்துடன் செவியமுதருந்திச் சென்றூர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியுடனும், ஆர்வத்துடனும் உபசரித்தனுப்பிய ஸ்ரீ நாராயணகுரு சேவாசிரமம் தவத்திரு. சுவாமி ஆதமானந்தா அவர் களின் பெருஞ்சிறப்பையும், வைத்திய ஆற்றலையும் என்றும் பாராட்ட வேண்டியது ஆவசியமென்பதை வெள்ளிவிழா ஏடுத்துக்காட்டிற்று. தவததிரு சுவாமி ஆத்துமானந்தா அவர்கள நீடு வாழப் பிராத்தி க்கினறோம்.



## — சங்கேந்தி —

# "திருவெம்பாவை திருப்பாவை மாநாடு"

இம்மாநாடு மன்மத - தை - 3ம் நாள் (16—1—56) சங்கேந்தி உயர்திரு. V. N. பங்களாவில் தவத்திரு கு. க. சதாசிவ அடிகளார் தலைமையில் மாலை 5-மணிக்கு நடைபெற்றது. தலைவரவர்கள் திருவெம்பாவை, திருப்பாவையின் சிறப்பையும், இறைவன் இயல்பையும், வழிபாட்டின் அவசியத்தையும் பற்றி விளக்கமாகக் கூறினார்கள். பின் திருத்துறைப்பூண்டி உயர்நிலைப் பள்ளியின் ஆசிரியர் திரு. ப. சி. ஜெகந்நாதம் பிள்ளை "கடவுட் பற்று" என்னும் பொருள்பற்றி மிகத் தெளிவாகப் பேசினார்கள். பின் மாணவ-மாணவிகட்குப் பரிசுகள் தலைவரால் வழங்கப்பட்டன. திருமுருகையா முதலியார் நன்றி கூறினார்கள். இரவு 9-மணிக்குச் சபை நிறைவு பெற்றது. பின் அனைவருக்கும் சித்திரான்னம் அளிக்கப்பட்டது.

அருட்டிரு. சாது நாராயண தேசிகரின் 45-வது ஆண்டு குருவழிபாட்டு (குருபூசை) விழா (5—2—56) மன்மத—தை—23-ம் நாள் சென்னை, தண்டையார்பேட்டையிலுள்ள ஷை தேசிகரவர்களின் நிலையத்தில், நிலையத் தலைவரும், த. நா. அ. சங்கத்தலைவரும் ஆகிய தவத்திரு. சுவாமி அருணகிரிநாதரவர்களால் மிகச்சிறப்பாக நடத்தப்பெற்றது. காலையில் குருவழிபாடும், பகல் 12-மணிக்கு மாகேஸ்வர பூசையும், மாலையில் வியாசர்பாடி அருட்டிரு. சுவாமி முக்தானந்தா அவர்கள் தலைமையில் அறிஞர் பலரின் சொற்பொழிவுகளும் நடைபெற்றது. பின் நிலையத் தலைவரவர்களால் நன்றி கூறலுடன் குருவழிபாட்டுவிழா இனிதே நிறைவெய்தியது.

REGD. No. M. 6630

# புத்தக விளம்பரம்.

* * *

| | |
|---|---|
| ஸ்ரீ ஆத்துமானந்த விளக்கம் மூலமும், உரையும் (காலிக்கோ பயிண்) | .... 2-0-0 |
| ஷை புஸ்தகம் (ராப்பர் பயிண்டு) | ... 1-0-4 |
| நித்தியாநித்தியவஸ்து விவேகம் வசன வடிவம் | ... 0-12-0 |
| திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர தேசிகரந்தாதி மூலமும், உரையும் | ... 0-6-0 |

மேற்கண்ட புத்தகங்கள் கிடைக்குமிடம் :—

ஸ்ரீ ஆத்துமானந்த ஆச்சிரமம்,

திலகபுரம் ரோட்டுத்தெரு,

அம்பாசமுத்திரம். (S. Ry.)

அச்சுரிமை: ந. வேணுகோபாலன் ஸ்ரீஜயலக்ஷ்மி பிரஸ், திருவண்ணுமலை
ஆசிரியரும், வெளியிடுபவரும்: சுவாமி சொருபானந்தா, கிழ்ப்பாலூர்.